உ
திருச்சிற்றம்பலம்
கற்பக விநாயகர் துணை

# அற்புதக் கற்பகம்

நள ஆண்டு ஆவணித்திங்கள் 25ம் நாள்
வெள்ளிக்கிழமை (10-9-1976) நிகழ்ந்த
**பிள்ளையார்பட்டிக் கற்பகவிநாயகர்**
ஆலய குடமுழுக்கு விழா
நினைவு வெளியீடு



பொருளுதவும் புண்ணியர்
பாகனேரி
திருமுறைப்புரவலர், சிவதர்மசீலர், சைவத்திருவாளர்
**ராம. முத்துப்பழனியப்பச் செட்டியார்**
அவர்கள்





வெளியிடுவோர்
**பன்னிரு திருமுறை மன்றம்,**
தெற்காடி வீதி, மதுரை-1

மன்ற வெளியீடு : 14

திருச்சிற்றம்பலம்
கற்பக விநாயகர் துணை

# அற்புதக் கற்பகம்

நள ஆண்டு ஆவணித்திங்கள் 25ம் நாள்
வெள்ளிக்கிழமை (10—9—1976) நிகழ்ந்த
பிள்ளையார்பட்டிக் கற்பகவிநாயகர்
ஆலய குடமுழுக்கு விழா
நினைவு வெளியீடு



பொருளுதவும் புண்ணியர்
பாகனேரி
திருமுறைப்புரவலர், சிவதர்மசீலர், சைவத்திருவாளர்
ராம. முத்துப்பழனியப்பச் செட்டியார்
அவர்கள்



வெளியிடுவோர்
பன்னிரு திருமுறை மன்றம்,
தெற்காடி வீதி, மதுரை-1

3-2

உ

திருச்சிற்றம்பலம்

# கற்பக விநாயகர்



கல்லைக் குடைந்தமைத்த கற்பகமே! என்னெஞ்சக்
கல்லில் உனதுருவைக் காட்டாயோ?- சொல்லரிய
பிள்ளையார் பட்டிப் பெருங்கோயில் கொண்டருளும்
வள்ளால் எனைக்காக்க வா.

சொ.சொ.மீ சுந்தரம்

3-2

உ

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

அறிவில் தொடங்கி ஞானத்தில் நிறைவுறுகிறது ஆன்ம வளர்ச்சி. தோத்திரங்களும் அறிவின் உருவாகிய அத்தி முகனை வணங்கி ஞானபூரணனை நம் கடம்பனை வாழ்த்தி அமைகின்றன. ஆகவே அறிவுச்சுடர் ஞான ஜோதிமயமாகி அகவிருளை அகற்றி ஆன்ம தரிசனத்தை அளிக்கிறது. இருபிள்ளைகளும் ஒரு பரம் பொருளின் ஆதியந்த நிலையை உணர்த்துகிறார்கள். உருவிலே உயர்ந்த ஆனை அறிவிலே யுஞ் சிறந்து விளங்குகிறது. அங்குமிங்கும் துளாவிக் கொண்டேயிருக்கும் இயல்புடைய துதிக்கை சதா சலித்துக் கொண்டிருக்கும் மனத்தைச் சுட்டி, ஒன்றைப் (பரத்தைப்) பற்றிக் கொண்டபோது அசைவின்றி இருக்கும் அமைப் பையும் உணர்த்துகிறது. ''ஐங்கரனை ஒத்தமனம்'' ஐம்புலனை அடக்கி விட்டபோது அதற்கு பாசமும் அங்குசமும் அவசிய மில்லாது போகிறது. ஞானபோதமாகிய மோதகத்தை மட்டும் கையில் ஏந்தியிருக்கிறது நமக்கு அளிக்க.

இந்த நிலையிலே தான் காட்சியளிக்கிறார் நமது பிள்ளை யார்பட்டிக் **கற்பகக்களிறு**. தில்லையிலே திருமுறைகளைக் **கண்ட விநாயகர்** மதுரையில் திருமுறைகளைக் **கொண்டவ ராக** பன்னிரு திருமுறை மன்றத்தில் உள்ள திருமுறைக் கோயில் விதானத்தில் வீற்றிருந்து திருமுறைகளைசெவிமடுத்து அருளுகிறார் எனவே பிள்ளையார்பட்டி குடமுழுக்கு விழாவில் தமக்கு திருமுறைநிவேதனம் செய்யப் பணித்தபடி ''**திருமுறைகளில் கற்பகம்**'' காட்சி அளிக்கிறார்.

சும்மா இருப்பாரா சொல்லுக் சொல் சொன்னயம் சொரியும் திரு. சொ. சொ. மீ. சுந்தரம்? துங்கக்கரிமுகத்துத் தூமணி யின் அடி வருடித் துயில் உணர்த்துகிறுர்-தாம் பாடிய பள்ளி எழுச்சிப் பத்திலே! கற்பனே ததும்பும் கட்டுரை ஒன்றும் கணபதிக்கு காணிக்கையாகத் தந்துள்ளார்கள். பன்னிரு திருமுறை மன்றத்திலே பதிந்த மனமுடைய அவர்கள் பணிக்கு உரியதாகிறது மன்றத்தாரின் பாராட்டு.

பெருமதிப்பிற்குரிய திரு ம அ. முருகேசன் அவர்கள் இவற்றை முழுதும் பார்த்து அழகிய அணிந்துரை ஒன்று அளித்துள்ளார்கள். அப்பெரியாருக்கு மன்றத்தின் மனமார்ந்த நன்றி.

"என்று தருங்கொல் என வேண்டா (து)" நின்று கற் பகம் போல் திருமுறை வாணர்களேப்பேணி திருமுறைகளிலே திளைத்திருக்கும் திருவினராகிய சிவதர்மசீலர் திரு ராம. முத்துப்பழநியப்பச் செட்டியார் அவர்கள் இந்த "அற் புதக்கற்பக"த்தை அன்பர்கள் யாவருக்கும் காட்டவிழைந் தனர். அதுவும் இசைந்தது அற்புதக் கற்பகம் அருநிழல் தர சொக்கேசன். அருள் அமுதருந்தி அவர்கள் எக்காலும் வாழ்க இனிது.

சுருங்கிய காலத்தில் இவ்வரிய நூலேச் செவ்விய முறை யில் அச்சிட்டுத் தந்த எக்ஸ்போ பிரிண்டர்ஸ் அவர்களுக்கு எமது நன்றி உரித்தாகுக.

மதுரை<br>30-8-'76

நீ. சா. சீனிவாசபிள்ளே<br>செயலாளர்<br>பன்னிரு திருமுறை மன்றம்

உச்சிப் பிள்ளே யாரை<br>நச்சித் தொழுவோம் நாமே!

உ
திருச்சிற்றம்பலம்

# அணிந்துரை.

மதுரை மாநகராட்சி நீதித்துறை அதிகாரி
உயர்திரு. **ம. அ. முருகேசன்** பி. ஏ., பி. எல். அவர்கள்

திருவாக்கும்; செய்கருமம் கைகூட்டும்; செஞ்சொற்
பெருவாக்கும்; பீடும் பெருக்கும் — உருவாக்கும்;
ஆதலால் வானேரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம் கை.

உலகப் படைப்பின் முதல்நிலை 'ஓம்' என்ற பிரணவம். அது இறைவனிலிருந்து தோன்றியது. தன்னின் வேருகாத தனது ஆற்றலை, அதுவும் ஒலியின் வன்மையைத் தன்னின் வேருக்கித் தந்தார் முழு முதற் பொருளான சிவபெருமான். எனவே அது உலகப் படைப்பின் முதல் தோற்றம். அந்த ஓங்கார வடிவமே, 'மூலாதாரப் பரம் பொருள்' என்றும், 'மூத்த பிள்ளையார்' என்றும் தொழப்படுகின்ற விநாயகர். இறைவனிலிருந்து வந்த ஓங்காரத்தின் வடிவமாக இருப்பதால் பிள்ளையார் சிவ பெருமானின் மூத்த பிள்ளை எனக் கருதப்படுகிருர். தேவர்கள் பிறப்பதற்கு முன்பே பிரமத்தினின்றும் வாக்குத் தோன்றியது. அதன் முதல் நிலையே பிரணவம் என்கிறது கடோபநிஷத். எனவே இறைவனின் (பிரம்மம்) வேறல்ல விநாயகர். "ஆதியில் ஒரு வார்த்தை இருந்தது. அது தேவனிடத்து இருந்தது," என்ற விவிலிய நூல் வாசகமும், இங்கு சிந்திக்கத்தக்கது. அளவிட முடியாத பெருமைகளை உடைய விநாயகப் பெருமான் கோயில் கொண்ட இடங்களும், கோலங்களும் பலப்பல அவைகளில் ஒன்று பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகர்.

கற்பக விநாயகரும், அவர் கோயில் கொண்டுள்ள பிள்ளையார்பட்டியும் தனிச்சிறப்பு உடையன. ஊர், வரலாற்றுத் தொடர்புடையது; பல திருநாமங்களை உடையது. கோயில் பல்லவர் காலத்திய குடவரைக் கோயில்; பின்னிட்டுச் சோழ, பாண்டிய மன்னர்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றது; நகரத்தார் திருப்பணிக் கை வண்ணத்தில் அழகு பொலிந்தது. மூர்த்தம் இரு திருக்கரங்களுடனும் அங்குச, பாசமில்லாமலும், அர்த்த பத்ம ஆசனத்தில் வலம்புரி விநாயகராக விளங்குகிறது. இது போன்று இன்னும் எத்துணையோ சிறப்புக்களைப் பெற்ற இத்திருக்கோயிலின் திருக்குட நீராட்டு விழாவில் வெளியிடப் பெறும் ''அற்புதக் கற்பகம்'' என்னும் இந்நூலுக்கு அணிந்துரை எழுதும் வாய்ப்பு, அதிலும் 'பிள்ளையார் சதுர்த்தி' நாளான இன்று எனக்குக் கிடைத்தது இறைவன் திருவருளே! இந்நூலுக்கு அணிந்துரை எழுதும் தகுதி எனக்கில்லை. இந்நூலை ஆக்கியோரும், வெளியிடக்காரணமாக இருப்பவரும் என் அருமை ஆப்த நண்பர்கள். அவர்களின் அன்புக்குக் கட்டுப்பட்டே எழுதுகிறேன்.

திரு சொ. சொ. மீ. சுந்தரத்தை தமிழுலகம் நன்கு அறியும். அமரராகிவிட்ட என் ஞானத்தந்தை. தமிழ்க் கடல் இராய. சொ. அவர்களின் மாணவர். என் பால் நட்பு பூண்டவர். பட்டிமண்டபங்களிலும் கவியரங்கங்களிலும் முழங்கி நாளும் தமிழ் வளர்ப்பவர் ஆழ்ந்த கருத்துக்களும், அற்புதக் கற்பனைகளும் அவரின் கவிதைகளுக்கு முத்திரைகள். இந்த நூலே அதற்கு ஒரு சிறந்த சான்று. அவர் இந்த நூலை அருமையாக ஆக்கியிருக்கிறார்.

இந்நூலை வெளிக் கொண்டுவருபவர், திருமுறைப் புரவலர், பாகனேரி உயர்திரு. ராம. முத்துப்பழனியப்ப செட்டியார் அவர்கள். தமிழ்க்கடல் இராய சொ அவர்களால் எனக்கு அறிமுகமான நல்ல நண்பர்களில் முன்னிற்பவர். சிவதர்மசீலர். அண்மையில் நடந்த மதுரை அங்கயற்

கண்ணி, இராமேச்சுரம் இராமநாதசுவாமி, திருவருணை அண்ணாமலை அண்ணல் ஆலய திருக்குட நீராட்டு விழாக்களில், பெரும்பொருள் செலவிட்டுத் தமிழகத்திலுள்ள பல திருமுறை வாணர்களை ஒன்று திரட்டி, திருமுறை இன்னிசை அரங்கும் அகண்டபாராயணமும் செய்துவைத்து இறையருள் பெற்றவர். மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்தைப்பேணி வளர்ப்பவர். பொருட் செல்வத்துடன் அருட் செல்வமும் பெற்றவர். இம்மை மறுமைப் பேறுகளை நெறி அறிந்து எய்தும் உறுதி பெற்றவர்.

இந்நூல் அளவில் சிறியதாயினும் அருமையில் பெரியது. நான்கு பகுதிகளாக ஆக்கப்பட்டிருக்கிறது. முதற்பகுதி 'திருமுறைகளில் கற்பகம்' எனப்படுவது. தனிச்சிறப்பு வாய்ந்தது. சைவப்பெருமக்களுக்கு வேண்டிய பல செய்திகளைக் கொண்டிருக்கிறது. சைவ சாத்திர நூல்களிலும் தோத்திர நூல்களிலும் விநாயகரைச் சுட்டும் பாடல்கள் இதில் அடங்கியிருக்கின்றன. தோத்திர நூல்களுள், வரிசை பிறழாமல், 1 முதல் 12 திருமுறைகளிலும் விநாயகரைப்பற்றி பாடல்களைத் தல முறையாகப் பண்கள் பெயருடன் இப்பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அத்தலங்களின் சிறப்புக்களையும் அங்கங்கே கொடுத்திருக்கின்றனர். அடுத்து, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கிலும், விநாயகப் பெருமானைக் குறித்த பாடல்களும், அச்சாத்திர நூல்களின் பெயர்களும், அவைகளைப் பாடிய ஆசிரியர் பெயர்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவை தவிர, புராணங்களிலும், திருப்புகழிலும் விநாயகரைப் பற்றிய பாடல்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதற்கெல்லாம் மேலாக, சமயக்குரவர்களின் விவரங்களும், சந்தான குரவர்களின் விவரங்களும், சித்தாந்த சாத்திரங்களின் விவரங்களும், திருத்தொண்டத் தொகை, அடியார்களின் காலம், மரபு, வழிபாட்டு முறை விவரங்களும், பாடல் பெற்ற தலங்களில் எழுந்தருளியிருக்கும் விநாயகரின் பெயர்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இப் பகுதி, சைவ சித்தாந்த மாணவர்களுக்கு ஒரு சிறு கையேடு

போல் அமைந்திருக்கிறது. இதைத் தொகுத்தளித்த மதுரைப் பன்னிரு திருமுறை மன்றச் செயலாளர் **திரு சீனிவாச பிள்ளை** அவர்களின் சீரிய முயற்சியை எவ்வளவு பாராட்டினு லும் தகும்.

இரண்டாம் பகுதியில் ஆசிரியர், விநாயகப் பெருமானின் பெருமைகளை விரித்துரைக்கிருர். விநாயகரின் எளிமையையும் (சௌலப்யம்) அருளாற்றலையும் (பரத்துவம்) திருவுருவப் பெருமையினையும், தத்துவத்தினையும் சுருங்கச் சொல்லி விளங்கவைத்திருக்கிருர். 'விநாயகர் ஞானக் கொழுந்து; முருகன் ஞானப்பழம்' என்ற விளக்கம் அருமை. சைவத் திருமுறைகளை உலகறியச் செய்தது, சீதப்பனிக்கோட்டுமால் வரைமேல் பாரதப்போர் தீட்டியது, வான்பொய்ப்பினும் தான் பொய்யாக் காவேரியைக் கவிழ்த்தது, ஔவைக்கு கையிலாய பதவி அளித்தது ஆகிய விநாயகர் அருட்செய்கைகளைச் சுட்டி, அவருக்கும் தமிழுக்கும், திருமுறைகளுக்கும் உள்ள தொடர் பையும் காட்டியிருக்கிருர். மூன்ரும் பகுதியில் விநாயகர் அகவல் முதலிய தோத்திரப் பாடல்களைத் தொகுத்தளித் திருக்கிருர்.

நான்காம் பகுதி ஆசிரியர் இயற்றிய 'பிள்ளையார் பட்டிக்கற்பக விநாயகர் திருப்பள்ளி எழுச்சி". இப்பகுதி ஆசிரியரின் ஆழ்ந்த தமிழ்ப் புலமையையும், இறையுணர் வையும், கற்பனை வளத்தையும் நன்கு காட்டுகிறது.

"துதிசெயும் அடியவர் திருமுறைபாடித்
துதிக்கையினுல் கரம் துதிக்கையென்ருச்சோ"
விதியினை மாற்றி எழுதியதாலே
விளங்கிய கொம்பும் வடிவிளைத்ததுவோ.

என்று கேட்கிருர். நல்ல கற்பனை!

"காத்திடும் உந்தன் கருணையைக் கண்டே
கண்ணனும் ஆழியில் கண் துயில்கின்றான்
சீர்த்தி மிகுந்தஉன் சேவையினாலே
தில்லையில் ஈசன் திருநடம் செய்வான்
வேர்த்திடும் போதினில் காத்தலில்லாயோ
மேதினிமேல் துணை வேறினியுண்டோ"
என்ற வரிகள் உள்ளத்தைத் தொடுகின்றன.

இதுபோல் இன்னும் எத்துணையோ வரிகளைக் காட்டலாம். பல இடங்களில், இது அருளாளர் வாக்கோ என்று ஐயுறச் செய்கிறது. படிப்பவர்க்கும் பாராயணம் செய்பவருக்கும் நல் விருந்து.

இவ்வழகிய நூலை ஆக்கியோர்க்கும் வெளியிட்டோருக்கும் கற்பக விநாயகரின் அருள் கடிதே கூடுக!

மதுரை
28-8-76

ம. அ. முருகேசன்

உ

கற்பக விநாயகர் துணை.

# அற்புதக் கற்பகம்

—○—

மண்ணில் பிடித்து வைத்தாலும்
　　மாவில் பிடித்து வைத்தாலும்
பண்ணை முழுதும் படித்தாலும்
　　படிப்பார் போல நடித்தாலும்
கண்ணில் ஞானக் காட்சியினைக்
　　காட்டித் தொண்டர் யாவரையும்
விண்ணோர் போற்ற வாழ்விக்கும்
　　வேழ முகத்தோன் அருளென்னே!

என்று போற்ற, எண்ணுவார்க்கு எளியவனாக இருந்து அருள் செய்பவன் விநாயகன். ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாத இறைவன், அடியார்களுக்கு அருள் செய்ய, ஆயிரம் திருநாமம் கொண்டு, அவதாரம் செய்கிறான். உருவைக்காட்டி அருவை உணர்த்தி ஞானம் தருகிறான். சத்தத்தினுள்ளே சதாசிவத்தையும் சித்தத்தினுள்ளே சிவலிங்கத்தையும் காட்ட இறைவன் எடுத்த உருவமே விநாயக மூர்த்தியின் உருவமாகும். ஞானவடிவான இறைவனை நமக்குக் காட்டும் குரு வடிவம் விநாயகர் வடிவம். செடியின் இயல்பைக் காட்டும் கொழுந்துபோல, சிவஞானச் செம்மை காட்டும் விநாயகரை ஞானக்கொழுந்து என்று திருமூலர் குறிப்பிடுகிறார்.

## விநாயகர் பெருமை

உலகம் ஓசையில் உருவாகியது. காற்றும் கடல் அலையும் ஓங்கார ஓசையிடுகின்றன. காதை அடைத்துக் கொண்டால், உள்ளே ஓம் என்ற ஒலி முழக்கம் கேட்கிறது. படைப்பின் தொடக்கம் ஓசை என்று காட்ட நடராசமூர்த்தி உடுக்கை (துடி) யொன்றை ஏந்தி ஆடுகிறார். இந்த ஓங்காரத்தின்

வடிவத்தைக் காட்டும் யானை முகத்தோடு தோன்றியவர் விநாயகர். உடம்பில் உள்ள ஆறு ஆதாரங்களில் மூலாதாரம் முதல் ஆதாரம். இதற்குரிய கடவுள் விநாயகர். மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக் காலால் எழுப்பும் கருத்தறிவிப்பவர் இவரே.

சிவனும் விநாயகனும் ஒன்றே என்று புராணங்கள் கூறும். இருவரும் மூன்று கண்களைப் பெற்றவர்கள். இருவரும் அராவணிந்த சடைமுடியும் அழகான புலியுடையும் கொண்டவர்கள். கட்டிய ஆடை அவிழ்ந்து விடாமல், ஒரு பாம்பை அதன்மீது கட்டிக்கொண்டிருப்பவர் விநாயகமூர்த்தி. இந்தப் பாம்பு குண்டலினி சக்தியின் அடையாளமாகும்.

எந்த இடத்திலும் வைத்து வழிபடத்தக்கவர் விநாயகர். எச்சில் இலைபோடும் இடத்தில் கூட விநாயகரை வைத்து வழிபடுவதுண்டு. அரசமரம் ஞானத்தை அருளத்தக்க ஆற்றலுடையது. ஞான நூலான திருமந்திரம் ஆவடுதுறையில் அரசமரத்தடியில்தான் இயற்றப்பட்டது. இதனாலேயே விநாயகரும் அரசமரத்தடியில் எழுந்தருளியிருக்கிறார்.

ஞானம் யாவருக்கும் பொதுவானது; விநாயகரும் மதங்கள் யாவினுக்கும் பொதுவானவர். அதனாலேயே வைணவர்களும் விநாயகரை வழிபாடு செய்கிறார்கள். "தும்பிக்கை ஆழ்வார்" என்ற பெயருடன் வைணவ விநாயகர் வழிபடப் பெறுகிறார். சமண, பௌத்தர்களும் விநாயகரை வழிபடுகிறார்கள். நேபாளத்திலும் விநாயக வணக்கம் உண்டு.

ஞானக்கொழுந்து விநாயகர் என்றால் ஞானப்பழம் முருகன். கொழுந்து முதலில் தோன்றிப் பழம் பிறகு தோன்றும். தொடக்கம் விநாயகர். பலன் முருகன். அதனாலேயே முருகனுக்கு விநாயகர் அண்ணனாகிறார். ஆன்மாவின் வடிவான வள்ளியம்மையின் ஆணவத்தை விரட்ட ஞானமயமான

விநாயகர் துணைவருகிறார். ஆன்மா இறைவனை அடைய ஞானம் துணையாகிறது என்பதைக் காட்டும் தத்துவ விளக்கமே இது.

விநாயகரின் வடிவங்களில் வல்லபை விநாயகர் வடிவமும் ஒன்று. தன்னுடைய வாமபாகத்தில் வல்லபை என்ற சக்தியை வைத்துள்ள விநாயகரே வல்லபை விநாயகர். மங்கையோடிருந்தே யோகம் செய்யும் தந்தையைப்போல, வல்லபை என்ற சக்தியோடிருந்தும் ஞானக் கனலாக, பிரம்மச்சாரி விநாயகர் விளங்குவதை இந்த வடிவம் உணர்த்துகிறது.

இறைவனை அடையத் தூண்டுவது ஞானம். இந்த ஞானமே விநாயகர். அதனாலேயே அவரைத் தூண்டுகை விநாயகர் என்பதும் உண்டு. திருச்செந்தூரில் தூண்டுகை விநாயகருக்குத்தனி ஆலயம் இருக்கிறது. தம்பியை வணங்கத் தண்ணருள் கொடுத்துத் தூண்டுபவர் இவர். இவர் சிறப்பை விளக்கும் பாடல் பின் வருமாறு.

"தூண்டுகை விநாயகனே! தொல்கணநா தன்இறையே!
ஈண்டுவரும் அன்பரெலாம் ஏற்றமுறத் — தூண்டுகிறாய்
தம்பிதிருச் செந்திலவன் தாள்பணிந்தால் வீடுடனே
இம்பரிலும் வாழ்ந்திடலாம் என்று."

பழனித்தலம் தோன்ற விநாயகர் காரணம் என்று பழனித் தலபுராணம் கூறும். அங்குள்ள விநாயகரைச் "சுப்பிரமணிய விநாயகர்" என்றும் தமிழுலகம் கூறும்.

ஆதிவடி வானவனைத் தென்பழனித் திருப்பதி இங் (கு)
அமைந்து தோன்றப்
பாதியுமை யேற்றவனைச் சுற்றியொரு கனிபெற்ற
பண்பி னானை
நீதிவடி வானவனை, நிறைதமிழைத் தந்தவனை
நினைவார் நெஞ்சில்
சோதிவடி வானவனைச் சுப்பிரமண்ய விநாயகனைத்
துதித்து வாழ்வாம்.

என்று இவர் புகழ்பாடிப் பொலி வடைந்தவர்கள் பலராவர்.

விநாயகர் பெருமையைத் திருவிளையாடல் புராணத்தில் பரஞ்சோதி முனிவர் சிறப்பாகக் கூறுகிறார். சிவனும் விநாய கரும் ஒன்றே என்ற தத்துவத்தை வலைவீசின படலம் என்ற திருவிளையாடலில் வைத்துள்ள நயம் பாராட்டத்தக்கதாக அமைகிறது. உமையவளுக்கு இறைவன் வேதப் பொருள் கூறுகிறான். அதை "காதரம் அடைந்தாள் போலக் கவலையும் சிறிது தோன்ற ஆதரம் இலளாய்க் கேட்டாள்" உமையம்மை. அதையுணர்ந்த இறைவன் வலைஞர் குலத்தில் பிறப்பாய் என்று பணித்தான். உன்னைப்பிரிந்து வாழ்வனோ என்று அம்மை கேட்கத் தானே வந்து மணம் புரிவதாகத் தனிக் கருணை தந்தான் இறைவன். இதையறிந்த விநாயகர் அங்கிருந்த வேதப் புத்தகங்களை யெல்லாம் கடலில் எறிய, முருகன் வந்து, இறைவன் கையில் வைத்திருந்த நூலையும் பறித்தெறிந்தான். இறைவன் வெகுண்டு நோக்கி இவர்களை உள்ளே வரவிட்ட நந்தியைச் சுறு மீனாக மாறுமாறும் முருகனை வணிகர் குலத்தில் ஊமைப் பிள்ளையாய்ப் பிறக்கு மாறும் சபித்தார். ஆனால் விநாயகரை மட்டும் சபிக்கவில்லை. வேழமுகத்தன் மீது சாபம் விதித்தால், அவனும் தானும் ஒன்றாதலின் அச்சாபம் தன்னையே சாருமாதலின் இறைவன் சாபம் கொடுக்கவில்லை என்று குறிக்கிறார் பரஞ்சோதியார்.

> வெருவரு செலவின் வேழ
> முகத்தனை விதித்த சாபப்
> பெருவலி தன்னைச் சாரும்
> பெற்றியால் சாபம் கூறான்

என்பது திருவிளையாடல் புராணம்.

மூவர் பாடிய தேவாரத் திருமுறைகளைப் பற்றி நம்பியாண்டார் நம்பிக்கு அறிவித்து, அவற்றை வெளிக் கொணர்ந்தவர் திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார். மேரு மலையில் பாரதத்தை எழுதியவர் விநாயகர். அதற்காகவே தன் கொம்பை ஒடித்துக் கையில் வைத்துக் கொண்டார். அகத்தியர் கமண்டலத்தைக் கவிழ்த்துவிட்டுக் காவிரியாற்றை

உலகுக்கு அருளியவர் விநாயகர். ஔவைக்குத் தமிழறிவு தந்தவர் விநாயகர். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான் பெருமாளும் கயிலாயம் செல்ல, அவர்களோடு தானும் செல்ல ஆசைப்பட்ட ஔவையார் விநாயகர் வழிபாட்டை வேகமாகச் செய்தார். அதுகண்ட விநாயகர் ஔவையை நிதானமாக வழிபட வைத்து சுந்தரரும் சேரமானும் கயிலாயம் சேர்வதற்கு முன்பே, தன் துதிக்கையால் அம்மையைத் தூக்கிக் கயிலாயத்தில் இறக்கிவிடுகிருர். வியந்துநின்ற சுந்தரரையும் சேரமானேயும் பார்த்து.

மதுர மொருநல் லுமையாள் புதல்வன் மலர்ப்பதத்தை
முதிர நினேயவல் லார்க்கரி தோமுகில் போல்முழங்கி
அதிர நடந்திடும் யானேயும் தேரும் அதன்பின் வரும்
குதிரையும் காதம் கிழவியும் காதம் குலமன்னனே.

என்று ஔவையார் பாடுகிருர். விநாயகரைப் பற்றிய நூல்கள் பல. அவற்றில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது ஔவையார் அருளிய விநாயகர் அகவல்.

சொற்பதம் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே!

என அழைத்து, ஆனேமுகன் தனக்கருளிய யோக விளக்கத்தை உரைக்கிருர் ஔவையார்.

இந்த அற்புதம் நின்ற கற்பகக்களிறு ஔவையார் அழைத்த பெயரிலேயே எழுந்தருளி இருக்குமிடம், காரைக்குடியை அடுத்த பிள்ளேயார்பட்டி என்ற திருத்தலமாகும். இத்தலத்திலுள்ள ஆலயம் ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முன் பல்லவ மன்னன் நரசிம்மவர்மனுல் கட்டப்பட்டது மலேயிலேயே குடைந்தமைக்கப்பட்ட குடவரைக் கோயிலில் புடைத்தெழுந்த சிற்பமாகக் கற்பகவிநாயகர் காட்சியளிக்கிருர். ஒளியுடைய ஒப்பற்ற தலேவனுதலின் இவரைத் தேசிவிநாயகப் பிள்ளேயார். என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. விநாயகரோடு திருவீங்கைக்குடி மகாதேவர் என்ற பெயரிலும்

மருதங்குடி நாயனுர் என்ற பெயரிலும் இரண்டு சிவலிங்க வடிவாகச் சிவபெருமானும் இவ்வாலயத்தில் எழுந்தருளியிருக்கிருர். ஏறத்தாழ 700 ஆண்டுகளாக இந்த ஆலயத்தைப் பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகரைக் குலதெய்வமாகப் பெற்ற பிள்ளையார்பட்டி நகரத்தார்கள் நிர்வகித்து வருகிருர்கள்.

ஓங்காரத் தத்துவத்தின் உருவமான விநாயகர், மற்ற ஆலயங்களில் இல்லாத சிறப்புடன் பிள்ளையார்பட்டியில் எழுந்தருளியிருக்கிருர். பிரணவத்தைச் சிறப்புறக் காட்டுவது போலக் கற்பகவிநாயகர் துதிக்கை வலம் சுழித்திருக்கிறது துதிக்கை தவிர இருகைகளை மட்டும் கொண்டு, அங்குசம், பாசம் இவை இல்லாமல் அமர்ந்திருக்கிருர். வலக்கையில் மோதகம் தாங்கி, இடக்கையைப் பெருமிதத்தோடும் இடையில் நாட்டி அழகுற விளங்கி அருள் செய்கிருர். உலக மக்களுக்கு அருட்பிரசாதம் வழங்க மோதகம் ஏந்தியிருப்பதாலேயே, சதுர்த்தி விரதத்தை இவர் சந்நிதியில் சிறப்பாகக் கொண்டாடுகிருர்கள் போலும்.

'மருவளர் தெய்வக் கற்பக மலர்'' என்று வல்லபைக் கணேசர் பிரசாத மாலையும், ''மலைக்கொடி பயந்த கற்பகம்'' என்று உத்திர கோச மங்கைப் பிராணமும் ''அங்குச பாசம் உவந்தணி நால்வாய் அற்புதக் கற்பகம்'' என்று பிள்ளைத் தமிழ்க் கொத்தும் பேசும் கற்பகம், விநாயகர் வடிவில், கற்பகத்தின் மிடியகற்றும் கற்பகமாக எழுந்தளிருயுள்ள பிள்ளையார்பட்டியில் மூன்று அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகங்கள் முடிந்து நான்காவது அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் 10 9-76ல் நிகழ்கிறது. இந்தத் திருநாளில் விநாயகர்தோத்திரங்கள் சிலவற்றை நினைத்து, கற்பக விநாயகர் பொற்பதம் பணிவோம்.

சொ. சொ. மீ சுந்தரம்

உ

திருச்சிற்றம்பலம்

# திருமுறைகளில் கற்பகம்

—○—

## நால்வர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன்
கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பின் அணைந்தபிரான்
அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர்
பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத்
தாள்போற்றி.

---

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளியது

## முதல் திருமுறை

1. திருச்செங்காட்டங்குடி பண்: பழந்தக்கராகம்

நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப
நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே
பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங்
குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான்
கணபதீச் சரத்தானே. 1

பாலினு னறுநெய்யாற் பழத்தினுற்
பயின்ருட்டி
நூலினுன் மணமாலை கொணர்ந்தடியார்
புரிந்தேத்தச்
சேலினுர் வயல்புடைசூழ் செங்காட்டங்
குடியதனுள்
காலினுற் கூற்றுதைத்தான்
கணபதீச் சரத்தானே. 2

கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்டக்
கடிபொழிலின்
நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான
சம்பந்தன்
சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங்
குடிசேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத்
திருப்பாரே. 3

குறிப்பு : கஜாமுகாசுரனைக் கொன்ற பழி நீங்க விநாயகர் சிவபெருமானை வழிபட்ட தலம். ஆலயத்தின் பெயர் ''கணபதீச்சரம்''. அடியார் பணி முட்டின்றி நிறைவேற வேண்டியருளியது.

---

## 2. திருவலிவலம் பண் : வியாழக்குறிஞ்சி

பூவியல் புரிகுழல் வரிசிலை நிகர்நுதல்
ஏவியல் கணைபிணை யெதிர்விழி யுமையவள்
மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்
மாவியல் பொழில்வலி வலமுறை யிறையே. 4

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு அவர்இடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே. 5

மன்னிய வலிவல நகருறை யிறைவனை
இன்னியல் கழுமல நகரிறை யெழின்மறை
தன்னியல் கலைவல தமிழ்விர கனதுரை
உன்னிய வொருபது முயர்பொருள் தருமே. 6

குறிப்பு : வழிபடும் அடியார் இடர்நீங்க, விநாயகரைத்தந்தது

++++

3. திருக்கழுமலம் பண் : வியாழக்குறிஞ்சி
(திருத்தாளச்சதி)

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்
பாலேசேர்வா யேனோர்கான் பயில்கண
முனிவர்களுஞ்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னொடுஞ்
சேர்வார்நாள் நாள் நீள்கயிலைத் திகழ்தரு
பரிசதெலாஞ்
சந்தித்தே யிந்தப்பார் சனங்கணின்று தங்கணால்
தாமேகாணு வாழ்வாரத் தகவுசெய்த வனதிடங்
கந்தத்தா லெண்கிக்குங் கமழ்ந்திலங்கு சந்தனக்
காடார்பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே. 7

செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்ததும்பி
மொய்ம்புறுஞ்
சேரேவாரா நீள்கோதைத் தெரியிழை
பிடியதுவாய்
ஒற்றைச்சேர் முற்றற்கொம் புடைத்தடக்கை
முக்கண்மிக்(கு)
ஓவாதேபாய் மாதானத் துறுபுகர்
முகவிறையைப்
பெற்றிட்டே மற்றிப்பார் பெருத்துமிக்க துக்கமும்
பேராநோய்தா மேயாமைப் பிரிவுசெய்த
வனதிடம்
கற்றிட்டே யெட்டெட்டுக் கலைத்துறைக்
கரைச்செலக்
காணுதாரே சேராமெய்க் கழுமல வளநகரே. 8

கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டு சண்பகக்
கானேதேனேபோராருங்கழுமல நகரிறையைத்
தஞ்சைச்சார் சண்பைக்கோன் சமைத்தநற்
கலைத்துறை
தாமேபோல்வார் தேனேரார் தமிழ்விர
கனமொழிகள்
எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்திசைத்த
மைத்தகொண்
டேழேயேழே நாலேமூன் றியலிசை
யிசையியல்பா
வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப்
பயிற்றுவோர்
மார்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதன்
மடவரலே. 9

குறிப்பு: இப்பாரினில் பெருந்துக்கம் நீங்க புகர் முக இறையைப் பெற்றது.

## இரண்டாந் திருமுறை

### 4. திருக்கடிக்குளம் பண் : நட்டராகம்

பொடிகொள் மேனிவெண் ணூலினர் தோலினர்
புலியுரி யதளாடை
கொடிகொள் ஏற்றினர் மணிகிணின் எனவரு
குரைகழல் சிலம்பார்க்கக்
கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகத்தைத்தம்
முடிகள் சாய்த்தடி வீழ்தரும் அடியரை
முன்வினை மூடாவே. 10

விண்க ளார்தொழும் விளக்கினைத் துளக்கிலா
விகிர்தனை விழவாரும்
மண்க ளார்துதித் தன்பரா யின்புறும்
வள்ளலை மருவித்தம்
கண்க ளார்தரக் கண்டுநங் கடிக்குளத்
துறைதரு கற்பகத்தைப்
பண்க ளார்தரப் பாடுவார் கேடிலர்
பழியிலர் புகழாமே. 11

பொங்கு நற்கரி யுரியது போர்ப்பது
புலியதள் அழல்நாகம்
தங்க மங்கையைப் பாகம துடையவர்
தழல்புரை திருமேனிக்

கங்கை சேர் தரு சடையினர் கடிக்குளத்
துறைதரு கற்பகத்தை
எங்குமேத்திநின் றின்புறு மடியரை
யிடும்பைவந் தடையாவே. 12

நீர்கொள் நீள்சடைமுடியனை நித்திலத்
தொத்தினை நிகரில்லாப்
பார்கொள் பாரிடத் தவர்தொழும் பவளத்தைப்
பசும்பொனை விசும்பாரும்
கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகந்தன்னைச்
சீர்கொள் செல்வங்க ளேத்தவல் லார்வினை
தேய்வது திணமாமே. 13

சுரும்பு சேர்சடை முடியினன் மதியொடு
துன்னிய தழல்நாகம்
அரும்பு தாதவிழ்ந் தலர்ந்தன மலர்பல
கொண்டடி யவர்போற்றக்
கரும்பு கார்மலி கொடிமிடை கடிக்குளத்
துறைதரு கற்பகத்தை
விரும்பு வேட்கையோ டுளமகிழ்ந் துரைப்பவர்
விதியுடை யவர்தாமே. 14

மாதி லங்கிய பாகத்தன் மதியமொ
டலைபுனல் அழல்நாகம்
போதி லங்கிய கொன்றையு மத்தமும்
புரிசடைக் கழகாகக்

காதி லங்கிய குழையினன் கடிக்குளத்
துறைதரு கற்பகத்தின்
பாதங் கைதொழு தேத்தவல் லார்வினை
பற்றறக் கெடுமன்றே. 15

குலவு கோலத்த கொடிநெடு மாடங்கள்
குழாம்பல குளிர்பொய்கை
உலவு புள்ளினம் அன்னங்க ளாலிடும்
பூவைசே ருங்கூந்தல்
கலவை சேர்தரு கண்ணியன் கடிக்குளத்
துறையுங்கற் பகத்தைச்சீர்
நிலவி நின்றுநின் றேத்துவார் மேல்வினை
நிற்ககில் லாதானே. 16

மடுத்த வாளரக் கன்னவன் மலைதன்மேன்
மதியிலா மையிலோடி
எடுத்த லும்முடி தோள்கர நெரிந்திற
இறையவன் விரலூன்றக்
கடுத்து வாயொடு கையெடுத் தலறிடக்
கடிக்குளந் தனின்மேவிக்
கொடுத்த பேரருட் கூத்தனை யேத்துவார்
குணமுடை யவர்தாமே. 17

நீரி னார்கடற் றுயின்றவ னயனொடு
நிகழடி முடிகாணார்
பாரி னார்விசும் புறப்பரந் தெழுந்ததோர்
பவளத்தின் படியாகிக்

காரி ஞர்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகத்தின்றன்
சீரி ஞர்கழ லேத்தவல் லார்களைத்
தீவினை யடையாவே. 18

குண்டர் தம்மொடு சாக்கியர் சமணருங்
குறியினி னெறிநில்லா
மிண்டர் மிண்டுரை கேட்டவை மெய்யெனக்
கொள்ளன்மின் விடமுண்ட
கண்டர் முண்டநன் மேனியர் கடிக்குளத்
துறைதரு மெம்மீசர்
தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள்
தூநெறி யெளிதாமே. 19

தனமலி புகழ்தயங் குபூந்த ராயவர்
மன்னனற் சம்பந்தன்
மனமலி புகழ்வண் டமிழ்மா லைகள்
மாலதாய் மகிழ்வோடும்
கனம லிகட லோதம்வந் துலவிய
கடிக்குளத் தமர்வானை
இனம லிந்திசை பாடவல் லார்கள்போ
யிறைவனோ டுறைவாரே. 20

குறிப்பு: கற்பகப் பிள்ளையார் சிவபெருமானை பூசித்து மாம் பழம் பெற்றதலம். கோயிலுக்கு வெளியே தென் மேற்கில் கற்பகப் பிள்ளையார் இருக்கிறார். கோயிலுக்கு வடகிழக்கே விநாயக தீர்த்தம் இருக்கிறது. கற்பகப் பிள்ளையார் பூசித்தமையால் இங்கு எழுந் தருளியுள்ள சிவபெருமானும் "கற்பகேசுரர்" என்று பேர் பெற்றார்.

---

5. திருவலஞ்சுழி பண் - நட்டராகம்

என்னபுண்ணியஞ் செய்தனைநெஞ்சமே
இருங்கடல்வையத்து
முன்னநீபுரி நல்வினைப்பயனிடை
முழுமணித்தரளங்கள்
மன்னுகாவிரி சூழ்திருவலஞ்சுழி
வாணனைவாயாரப்
பன்னியாதரித் தேத்தியும்பாடியும்
வழிபடுமதனாலே. 21

விண்டொழிந்தன நம்முடைவல்வினை
விரிகடல்வருநஞ்சம்
உண்டிறைஞ்சுவா னவர்தமைத்தாங்கிய
இறைவனையுலகத்தில்
வண்டுவாழ்குழல் மங்கையொர்பங்கனை
வலஞ்சுழியிடமாகக்
கொண்டநாதன்மெய்த் தொழில்புரிதொண்டரோடு
இனிதிருந்தமையாலே. 22

மாதொர்கூறனை வலஞ்சுழிமருவிய
மருந்தினை வயற்காழி
நாதன்வேதியன் ஞானசம்பந்தன்வாய்
நவிற்றிய தமிழ்மாலை
ஆதரித்திசை கற்றுவல்லார்சொலக்
கேட்டுகந்தவர் தம்மை
வாதியாவினை மறுமைக்குமிம்மைக்கும்
வருத்தம்வந்தடையாவே. 23






குறிப்பு: இத்தலத்து விநாயகரை பூசித்ததால் அமுதம் திரண்டது. தேவேந்திரனால் பூசிக்கப்பட்ட இந்த வெள்ளை விநாயகர் அவன் இத்தலத்திற்கு வந்ததும் இங்கேயே நின்று விட்டார். இக்கோயிலில் பிரம்மோற்சவம் இவருக்குத் தான் நடைபெறுகிறது. தீண்டாத் திருமேனி. இங்குள்ள மூலத்தான சிவ பெருமான் "கற்பக நாதேசுரர்". பிலத்தில் சென்று விட்ட காவிரி ஏரண்ட முனிவர் தம்மைப் பலி கொடுத்தபின் அது மேலே வந்து வலஞ்சுழித்துக் கொண்டு சென்ற காரணத்தால் ஊருக்கு வலஞ்சுழி என்ற பெயர்.



## ௬. *திருவீழிமிழலை* — பண் : *புறநீர்மை*

*புள்ளித்தோ லாடைபூண்பது நாகம்*
*பூசுசாந் தம்பொடி நீறு*
*கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டம்*
*காளியைக் குணஞ்செய்கூத் துடையோன்*
*அள்ளற்கா ராமை யகடுவான் மதியம்*
*ஏய்க்கமுள் தாழைக ளானை*
*வெள்ளைக் கொம்பீனும் விரிபொழில்வீழி*
*மிழலையா னெனவினை கெடுமே.* 24

*கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த*
*கரமுரஞ் சிரநெரிந் தலற*
*அடர்த்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க*
*அருளினன் தடமிகு நெடுவாள்*

படித்தநால் மறைகேட் டிருந்தபைங் கிளிகள்
பதங்களை யோதப்பா டிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 25

வேந்தர்வந் திறைஞ்ச வேதியர் வீழி
மிழலையுள் விண்ணிழி விமானத்து
ஏய்ந்ததன் தேவியோடுறை கின்ற
ஈசனை யெம்பெரு மானைத்
தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன்
துமொழி ஞானசம் பந்தன்
வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை
வானவர் வழிபடு வாரே. 26

குறிப்பு : திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கும் திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும் இறைவன் படிக்காசு அளித்த இத்தலத்துக்கோயிலில் மேற்கே இருக்கும் பலிபீடத்தருகே **'படிக்காசு பிள்ளையாரும்'** அவர்பக்கலில் சம்பந்த சுவாமியும் நாவுக்கரசும் இருக்கிறார்கள்.

++++

உ

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியது

## நான்காந் திருமுறை

### 7. திருவதிகை வீரட்டானம் பண் : காந்தாரம்

பலபல காமத்த ராகிப் பதைத்தெழு
வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வானகயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர்
தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது
மில்லை. 27

குறிப்பு : அட்ட வீரட்டங்களில் திரிபுர தகனஞ்செய்த தலம் – திருநாவுக்கரசு சுவாமிகளின் சூலைநோய் தீரப் பெற்ற திருநகர். சமணர்கள் ஏவியயானை தீயமனத் தினரைக் கொல்லுமே தவிர தூய மனத்தினரை ஒன்றுஞ்செய்யாதென ஓதியருளியது.

---

## ஐந்தாந் திருமுறை

### திருப்பூவணூர் திருக்குறுந்தாகை

பூவ ணூர்புனி தன்திரு நாமந்தான்
நாவில் நூறுநூ றுயிரம் நண்ணினூர்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. 28

அனுச யப்பட் டதுஇது என்னுதே
கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரில்தலை யான மனிதரே. 29

நார ணன்னொடு நான்முகன் இந்திரன்
வரா ணன்கும ரன்வணங் குங்கழற்
பூர ணன்திருப் பூவனூர் மேவிய
கார ணன்னெனை யாளுடைக் காளையே. 30

குறிப்பு: மூன்றும் பாடலில் விநாயகர் சிவனைப் பூசித்தது கூறப்படுகிறது.

—○—

## ஆருந்திருமுறை

### திருப்புறம்பயம் — திருத்தாண்டகம்

கோவாய இந்திரனுள் ளிட்டா ராகக் குமரனும் விக்கின விநாய கன்னும், பூவாய பீடத்து மேல யன்னும் பூமி யளந் தானும் போற்றி சைப்பப், பாவாய இன்னிசைகள் பாடி யாடிப் பாரிட முந் தாமும் பரந்து பற்றிப், பூவார்ந்த கொன்றை பொறிவண் டார்க்கப் புறம்பயம்நம் மூரென்று போயி னரே. 31

குறிப்பு: "பிரளயங் காத்த விநாயகர்" வெண்மை நிறம் விநாயக சதுர்த்தியன்று ஒரு ஆடம் (சுமார் 20லி) தேன் அபிஷேகம் செய்யப்படுகின்றது - மற்றை நாட்களில் அபிஷேகம் கிடையாது.

### திருவீழிமிழலை

கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலுங் கயா சுரனை யவனாற்கொல் வித்தார் போலும், செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலுந் திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தார் போலும், மெய்வேள்வி மூர்த்திதலை யறுத்தார் போலும் வியன்வீழி மிழலையிடங் கொண்டார் போலும், ஐவேள்வி ஆறங்க மானார் போலும் அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 32

### திருஏகம்பம்.

முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண் மூவிலை வேல் மூர்த்திகாண் முருக வேட்குத் தந்தைகாண் தண் சடமா முகத்தி னாற்குத் தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச், சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச் சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும், எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 33

### திருநாரையூர்.

தக்கனது வேள்விகெடச் சாடி னானைத் தலைகலனாப் பலியேற்ற தலைவன் தன்னைக், கொக்கரைசச் சரிவீணைப் பாணி யானைக் கோணாகம் பூணாகக் கொண்டான் தன்னை, அக்கினொடும் என்பணிந்த அழகன் தன்னை ஆறுமுகனோடு ஆனை முகற் கப்பன் தன்னை, நக்கனைவக் கரையானை நள்ளாற் றானை நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 34

குறிப்பு : தில்லையில் சேமித்து வைத்திருந்த திருமுறைகளை நம்பியாண்டார் நம்பிகள் மூலமாக வெளிப்படுத்தி யருளிய "பொல்லாப் பிள்ளையார்" எழுந்தருளி யிருக்கும் தலம்.



## திருவாய்மூர்

பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன் போற் றிசைத்து விண்ணோர் புகழக் கண்டேன், பரிந்தார்க்கருளும் பரிசுங் கண்டேன் பாராகிப் புனலாகி நிற்கை கண்டேன், விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன் மெல்லியலும் விநாயகனுந் தோன்றக் கண்டேன், மருந்தாய்ப் பிணி தீர்க்கு மாறு கண்டேன் வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 32

குறிப்பு : விநாயகர் அப்பர் சுவாமிகளுக்கு தரிசனம் தந்தது



சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

## ஏழாந் திருமுறை

1. திரு ஓணகாந்தன் தளி — பண் : இந்தளம்

நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு நித்தல் பூசனை செய்ய லுற்றார், கையில் ஒன்றும் காணம் இல்லைக் கழலடி தொழு துய்யின் அல்லால், ஐவர் கொண்டிங் காட்ட ஆடி ஆழ்குழிப்பட் டழுந்து வேனுக் (கு), உய்யுமாறென் றருளிச் செய்யீர் ஓணகாந்தன் தளியுளீரே. 33

திங்கள் தங்கு சடைக்கண்மேலோர் திரைகள் வந்து புரளவீசும், கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி, அங்கைவேலோன் குமரன் பிள்ளை தேவியார் கொற் றட்டியாளார், உங்களுக் காட் செய்யமாட்டோம் ஓணகாந்தன் தளியுளீரே 34

ஓவணமேல் எருதொன்றேறும் ஓணகாந்தன் தளியுளார்தாம், ஆவணஞ்செய் தாளுங்கொண்டு வரைதுகி லொடு பட்டுவீக்கிக், கோவணமேற் கொண்டவேடம் கோவையாகஆ ரூரன்சொன்ன, பாவணத்தமிழ் பத்தும் வல்லார் பறையுந் தாஞ் செய்த பாவந்தானே. 35

குறிப்பு : ஓணன், காந்தன் என்னும் இரு அசுரர்கள் பூசித்த தலம். இரண்டாவது பாடல் விநாயகரைக் குறித்து நிந்தாஸ்துதியாகப் பாடியருளியது.



2. **திரு ஆரூரில் பாடியது** பண் : நட்டராகம்

பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக் கசைத்தீர், முன்செய்த மூவெயிலும் எரித்தீர்முது குன்றமர்ந்தீர், மின்செய்த நுண்ணிடையாள் பர வையிவள் தன்முகப்பே, என்செய்த வாறடிகேள் அடி யேன்இட் டளங்கெடவே. 36

பத்தா பத்தர்களுக் கருள் செய்யும் பரம்பரனே முத்தா முக்கணனே முது குன்றம் அமர்ந்தவனே, மைத்தா ருந்தடங்கண் பர வைஇவள் வாடாமே, அத்தா தந்தருளாய் அடி யேன்இட் டளங்கெடவே 37

ஏத்தா திருந்தறியேன் இமை போர் தனி நாயகனே, மூத்தாய் உலகுக்கெல்லாம் முது குன்றம் அமர்ந்தவனே, பூத்தா ருங்குழலாள் பர வைஇவள் தன்முகப்பே, கூத்தா தந்தருளாய் கொடி யேன்இட் டளங்கெடவே. 41

பிறையா ருஞ்சடைஎம் பெருமான்அரு ளாய் என்று முறையால் வந்தமரர் வணங் கும்முது குன்றர் தம்மை மறையார் தங்குரிசில் வயல் நாவலா ரூரன் சொன்ன இறையார் பாடல்வல்லார்க் கெளி தாஞ்சிவ லோகமதே. 42

குறிப்பு: சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுது குன்றில் பெற்ற பொன்னை ஆற்றிலிட்டு பின் ஆரூர் சேர்ந்து கமலா ஆலயத்தில் இறங்கி பொன்னை எடுத்து அது மாற்றுக் குறைந்திருந்தது கண்டு மறுபடியும் பெருமானைப்பாடி மாற்றுக்குறையாமல் பெற்ற தலம். விநாயகர் நடுவராக இருந்து மாற்றுரைத்துக் காட்டிய படியால் "மாற்றுரைத்த பிள்ளையார்" என்று குளக்கரையில் வீற்றிருக்கிறார்.

---

### 3. திருநாகைக்காரோணம்.

பண் : கொல்லிக்கௌவாணம்

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப் பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர், செத் தார்தம் எலும் பணிந்து சேவேறித் திரிவீர் செல் வத்தை மறைத்துவைத்தீர் எனக்கொருநாள் இரங்கீர், முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை அவைபூணத் தந்தருளி மெய்க் கினிதா நாறும், கத்தூரி கமழ்சாந்து பணித்தருளவேண்டும் கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 43

மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே ஆட்சி மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன், எண்ணிலி உண் பெருவயிறன் கணபதிஒன் றறியான் எம்பெருமான் இதுதகவோ இயம்பியருள் செய்யீர், திண்ணெனஎன் உடல்விருத்தி தாரீரே ஆகில் திரு மேனி வருந்தவே வளைக்கின்றேன் நாளைக், கண் ணறையன் கொடும்பாடன் என்றுரைக்க வேண்டா கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 44

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை உடையேன், உண்மயத்த உமக்கடியேன் குறை தீர்க்க வேண்டும், ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும், கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டும் கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரென், றண்மயத்தால் அணிநாவல் ஆரூரன் சொன்ன அருந்தமிழ்கள் இவைவல்லார் அமர்உலகாள் பவரே 45

குறிப்பு : இத்தலத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவனை வேண்டிப், பொன், ஆடை ஆபரணம், முதலிய பொருள்களைப் பெற்றார் - "கணபதி ஒன்றறியான்" என்று இவர் பாடியது விநாயக மூர்த்தியின் எளிவந்த தன்மையைக் குறிக்கிறது.

4. திருவையாறு. பண் : காந்தாரபஞ்சமம்

பரவும் பரிசொன் றறியேன்நான் பண்டே உம்மைப் பயிலாதேன், இரவும், பகலும் நினைந் தாலும் எய்த நினைய மாட்டேன்நான், கரவில் அருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப் பாலை, அரவந் திரைக்கா விரிக்கோட்டத்தையா றுடைய அடிகளோ. 46

**பிழைத்த பிழையொன் றறியேன்நான் பிழையைத் தீரப் பணியாயே**, மழைக்கண் நல்லார் குடைந்தாட மலையும் நிலனுங் கொள்ளாமைக், கழைக்கொள் பிரசங் கலந்தெங்குங் கழனி மண்டிக் கையேறி, அழைக்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 47

கூடி அடியார் இருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப்பிலீர், ஊடி இருந்தும் உணர்கிலேன் உம்மைத் தொண்டன் ஊரனேன், தேடி எங்கும் காண் கிலேன் திருவாரூரே சிந்திப்பன், ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத் தையாறுடைய அடிகளோ. 48

குறிப்பு : அப்பர் சுவாமிகளுக்கு கயிலைக் காட்சி அளித்த தலம். தல விநாயகர் "ஆதிவிநாயகர்" எனப்படுவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ள மிகுந்திருந்த காவிரியைக் கடக்கத் தென் கரையிலிருந்து "ஐயா றுடைய அடிகளோ" என்றழைத்துப் பாடியபோது இவ்விநாயகர் "ஓலம் ஓலம்" என்று சொன்னாராம்.



மாணிக்கவாசக சுவாமிகள் அருளியது.

## எட்டாந்திருமுறை

**1. திருவாசகம்** **குழைத்தபத்து**

**விநாயகனே!**

வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்டமுழுதும்
தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி
என்னைப் பணிகொண்டாய்,
வேண்டி நீயா தருள் செய்தாய், யானும்
அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன்றுண்டென்னில் அதுவும்
உன்றன் விருப்பன்றே- 49

**2. திருக்கோவையார்—**

காரணி **கற்பகங் கற்றவர் நற்றுணை**
பாணர் ஒக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச்
சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் **தக்கோர் தம்சங்க**
**நிதி விதிசேர்**
ஊருணி உற்றவர்க் **ஊரன் மற்**
**றியாவர்க்கும் ஊதியமே.** 50

## ஒன்பதாந் திருமுறை

### தில்லை

1. திருவிசைப்பா திருமாளிகைத் தேவர்

தனதன்நற் றோழா! சங்கரா! சூலபாணியே!
தாணுவே! சிவனே!
கனகநற் றூணே! கற்பகக் கொழுந்தே!
கண்கள்மூன் றுடை யதோர் கரும்பே!
அனகனே! குமர விநாயக சனக!
அம்பலத் தமரசே கரனே!
உனகழல் இணையென் நெஞ்சினுள் இனிதாத்
தொண்டனேன் நுகருமா நுகரே!

2. திருப்பல்லாண்டு சேந்தனர்

புரந்தரன் மால்அயன் பூசலிட்(டு)
ஓலமிட்(டு) இன்னம் புகலரிதாய்
இரந்திரந்(து) அழைப்ப என் னுயிராண்ட
கோவினுக் கென்செய வல்லமென்றும்
கரந்துங் கரவாத கற்பகனுகிக் கரையில்
கருணைக்கடல்
பரந்தும் நிரந்தும் வரம்பிலாப்
பாங்கற்கே பல்லாண்டு கூறுதுமே.

---

## பத்தாந் திருமுறை

திருமந்திரம் திருமூலநாயனர்

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே!

## பதினோராந் திருமுறை

### கபிலதேவ நாயனார் அருளிய

### மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை

திருவாக்கும் செய்கருமங் கைக்கூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் — உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தங் கை. 54

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கைதணி விப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து. 55

### அதிராவடிகள் அருளிய

### மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவை

மொழியின் மறைமுதலே முந்நயனத் தேறே
கழிய வருபொருளே கண்ணே—தெழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதையனே சூழாதென் அன்பு. 56

### நம்பியாண்டார் நம்பி அருளிய

### திருநாரையூர் விநாயகர் திருவிரட்டைமணிமாலை

என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசுமகிழ் சோலை வியன்நாரை யூர்முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான். 57

மருப்பைஒரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பைஅடி போற்றத் துணிந்தால்—நெருப்பை
அருந்தஎண்ணு கின்றஎறும் பன்றே அவரை
வருந்தஎண்ணு கின்ற மலம். 58

நாரணன் முன்பணிந் தேத்தநின்
றெல்லை நடாவியவத்
தேரண வுந்திரு நாரையூர்
மன்னு சிவன்மகனே
காரண னேஎம் கணபதியே
நற் கரிவதனு
ஆரண நுண்பொரு ளேஎன்
பவர்க்கில்லை அல்லல்களே. 59



## பன்னிரண்டாந் திருமுறை

பெரிய புராணம் சேக்கிழார் சுவாமிகள்

எடுக்கும் மாக்கதை இன்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம். 60

---

## சித்தாந்த சாத்திரங்களில் சித்திவிநாயகர்

1. *சிவஞானபோதம்* *மெய்கண்டார்*

கல்லால் நிழல்மலை வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே.

2. *சிவஞான சித்தியார்* *அருணந்தி சிவாச்சாரியார்*

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன் நால்வாய்
ஐங்கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறைஇதழித் தாழ்சடையன் தரு
ஒருவாரணத்தின் தாள்கள்
உருகோட்டன்பொடும் வணங்கி ஓவாதே இரவுபகல்
உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன் திருமால் செல்வமும் ஒன்றோ
என்னச் செய்யுங்கோவே!

3. *உண்மை விளக்கம்* *திருவதிகை மனவாசகங் கடந்தார்*

வண்மைதரும் ஆகமநூல் வைத்தபொருள் வழுவா
உண்மை விளக்கம் உரைசெய்யத் — திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற்று ஐங்கரனைப்
பந்தமறப் புந்தியுள் வைப்பரம்.

*உமாபதி சிவாச்சாரியார் அருளியது*

4. *சிவப்பிரகாசம்*

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வரும்ஆனை கழல்நாளு மறவாமல்
அளியாளும் மலர்தூவும் அடியரர்கள் உளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே!

5. *திருவருட்பயன்*

நற்குஞ்சரக் கன்று நண்ணில் கலைஞானம்
கற்குஞ்சரக் கன்று காண்.

6. *சங்கற்ப நிராகரணம்*

திருந்திய அருந்தவம் பொருந்துபன் முனிவர்
கமையாக் காதல் அமையாது பழிச்சும்
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை
வாள்தரு மும்மை நாட்டம் நால்வாய்ப்
பாசம் அங்குசம் தேசுறும் எயிறுஒண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்து
அங்கதம் கடகம் பொங்கிழை யாரம்
நிறைமணிச் சுடிகைக் கறையணல் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுதன் னிருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே.

——



உ
திருச்சிற்றம்பலம்

# புராணங்களில் புகர்முகன்

1. *கோயிற்புராணம்* *உமாபதி சிவாச்சாரியார்*

பொற்ப தப்பொது வார்புலி யூர்புகழ்
செற்ப தப்பொரு ளாகுவ, தூயவர்
அற்ப* கற்றெழ, வாழணி கோபுரக்
கற்ப கத்தனி யானை கழல்களே!

( *அல் - பகல் தொழ)

2. *கந்தபுராணம்* *கச்சியப்ப சிவாச்சாரியார்*

திகடசக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

3. *திருவிளையாடற் புராணம்* *பரஞ்சோதி முனிவர்*

சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர
முத்தியான முதலைத் துதிசெயச்
சுத்தியாகிய சொற்பொருள் நல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமெனும்
தறிநிறுவி உறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்.

——

உ
திருச்சிற்றம்பலம்

# திருப்புகழில் ஒருமருப்பன்

ராகம்: நாட்டை தாளம் ஆதி

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பகம் எனவினை கடிதேகும்;
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை-
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே;
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே!
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா!
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புனம் அதனிடை யிபமாகி-
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கணம் மணம்அருள் பெருமாளே.

குறிப்பு: எக்கருமம் தொடங்கினும் கணபதியை முதலில் நினைவார்க்கு சித்தியும் நினையாதார்க்கு இடரும் உண்டாம் என்ற சிவபெருமாள் ஆணையை தம்பியிடத்தும் தந்தையிடத்துமே நிறைவேற்றிக் காட்டிய ஆற்றல் உடையவர் அத்திமுருகன்.



ராகம்: பூபாளம் தாளம்: ரூபகம்

உம்பர்தருத் தேநுமணிக் கசிவாகி-
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூதி;
இன்பாசத் தேபருகிப் பலகாலும்-
என்றனுயிர்க் காதரவுற் றருள் வாயே-
தம்பிதனக் காகவனத் தணைவோனே-
தந்தைவலத் தாலாருள்கைக் கனியோனே;
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே-
ஐந்துகரத் தானைமுகப் பெருமானே.

---

## கொங்கணகிரி (கோவை ஜில்லா)

ராகம்: பூபாளம் தாளம்: கண்டசாபு

ஐங்கரனை யொத்தமன மைம்புலன் அகற்றிவளர்
அந்திபக லற்றநினை வருள்வாயே-
அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை
அன்பொடுது திக்கமனம் அருள்வாயே;
தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திரவெ ளிக்குவழி யருள்வாயே;
தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்
சம்ப்ரமவி தத்துடனெ யருள்வாயே;
மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமனம்
உன்றனைநி னைத்தமைய அருள்வாயே-
மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரக்ஷபுரி
வந்தணைய புத்தியினை யருள்வாயே;
கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொருள் அருள்வாயே-
குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கணகி ரிக்குள்வளர் பெருமானே.

௨

## மதுரை

ராகம் தன்யாசி) (தாளம் ஆதி

ஆனைமுக வற்கு நேரிளைய பத்த
ஆறுமுக வித்த கமரேசா-
ஆதியர னுக்கும் வேதமுதல் வற்கும்
ஆரணமு ரைத்த குருநாதா:
தானவர் குலத்தை வாள்கொடு துணித்த
சால்சதுர் மிகுத்த திறல்வீரா
தாளிணைக ளூற்று மேவியப தத்தில்
வாழ்வொடு சிறக்க அருள்வாயே:
வானெழு புவிக்கு மாலுமய னுக்கும்
யாவரொரு வர்க்கு மறியாத-
மாமதுரை சொக்கர் மாதுமை களிக்க
மாமயில் நடத்து முருகோனே:
தேனெழு புனத்தில் மான்விழி குறத்தி
சேரமரு வுற்ற திரள்தோளா-
தேவர்கள் கருத்தில் மேவிய பயத்தை
வேல்கொடு தணித்த பெருமாளே!

———

குறிப்பு: ஆனைமுகனது திருவிளையாடல்களில் சில திருமால் தொடர்புடையவை. 1. திருமால் சிவபெருமானிடத்தில் அரிதில் பெற்றுவந்த சக்கரத்தை விநாயகர் பறித்து விழுங்கிவிட, அவர் மகிழும்படி நடனம் ஆடி அதை மீளப் பெற்றனர் என்ப.

2. இரங்கநாதர் விக்ரஹத்துடன் இலங்கை சென்று கொண்டிருந்த விபீஷணர் தாம் நீராடித்திரும்பும்வரை இரங்கநாதரை தரையில் வைக்காமல் கையிலேயே வைத்திருக்க ஒருவர் வேண்டி நிற்க, சிராப்பள்ளி உச்சிப் பிள்ளையார் ஒரு சிறுவன் வடிவிலே தோன்றி, அவருக்கு உதவுவான் போல, இரங்கநாதரைப் பெற்றுப் பின் தரையில் வைத்து மறைந்தனர். நீராடிவந்த விபீஷணர் இரங்கநாதரை எடுக்க முடியாமல் ஏமாந்து சென்றார் இலங்கைக்கு.

விண்ணப்பமின்றி, வேண்டியவற்றை வரையாது வழங்குபவர் விநாயகர்.

உ

திருச்சிற்றம்பலம்

# பிறநூல்களில் பிள்ளையார்

———

ஔவையார் அருளியவை.

## 1. விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசெந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சில் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!
இப்பொழு தென்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்

கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்தே
தலமொரு நான்கும் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி
ஆரு தாரத் தங்குச நிலையும்
பேரு நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழிமுனைக் கபாலமும் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்தி
குண்டலி யதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடல்சக் கரத்தின் உறுப்பையும் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் கருளி
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்தே

வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே எந்தன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டுக் கொன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தியென் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வெளி காட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவுக் கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கரத்தின் நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

---

2. பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா.

3. வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

4. ஏரானைக் காவிலுறை என்னானைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினால் - வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரஉற் பத்திவரும்
சத்திவரும் சித்திவரும் தான்.

உ

திருச்சிற்றம்பலம்

---

முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழுதுஅகற்றும் முகத்தினனை,
அற்பசுகத்து எனை அழுத்தா ஐங்கரனைப்,
பிற்பவமும் அகற்றும் கோவைச்,
சொற்பழுது புரியாத வணிகர்குலம்
தினம் பணியும் துணைத்தா ளானை,
கற்பகத்தின் மிடிஅகற்றும் கற்பகம்ஆம்
விநாயகனைக் கருத்துள் வைப்பாம்.

— **கோவிலூர் ஆண்டவர்**

திருவும், குலமும், எழில்நலனும்
திகழ்நற் குணனும் சிறப்பு எவையும்
மருவு மகளிர் மன்றலும், நன்
மக்கட் பேறும், வளர்கல்விப்
பொருளும், தெருளும், மெய்ஞ்ஞானப்
பொலிவும் மருதங் கூர்வாழ
வருகற் பகப்பேர் அண்ணல்கழல்
வணங்க நியமம் வழங்கிடுமே.

— **சொக்கலிங்க ஐயா**

பெருவரங்கள் தரும்தேசி விநாயகப்
பிள்ளையார் பாதம் பணிந்து,
திருவீங்கைக் குடிமகா தேவர்அவர்
திருத்தாள்கள் வணங்கி, மேலும்
அருள்மருதங் குடிநாய னார்அவர்தம்
அடிமலர்கள் சேவித்து, என்றும்
மருள்கடிந்த சிவகாமி யொடுவாடா
மலர்மங்கை அருள்கொள் வோமே.

— **சா. கணேசன்**

உ
திருச்சிற்றம்பலம்

# பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகர் 'திருப்பள்ளி எழுச்சி'

(சொ. சொ. மீ. சுந்தரம்)

——

ஓமெனும் மந்திரத் துட்பொரு ளானாய்.
　　உணர்ந்தவர் நெஞ்சில் ஒளிவிளக் கானாய்
சாமியென் றுன்னை வாழ்த்திடும் அடியார்
　　தண்டமிழ் பாடத் தலையசைக் கின்றாய்.
ஏமமும் நானே என்பது காட்டி
　　இடக்கரந் தன்னை இடையினில் வைத்தாய்
காமியத் தால்வரும் கவலைகள் மாற்றும்
　　கற்பக மே! பள்ளி எழுந்தரு ளாயே. 　　1

வீசிய பெருஞ்செவி வேழமு கத்தாய்!
　　விழித்திரி அற்புத வித்தகன் ஆனாய்.
தேசிவி நாயகன் உன்னடி தொழவே
　　செந்தமிழ்ப் பாணரும் யாழுடன் வந்தார்.
பேசிய திருமுறை ஓதிய சான்றோர்
　　பிள்ளையுன் சந்நிதி பேணிவந் துள்ளார்
காசியில் மிஞ்சிய பிள்ளையார் பட்டிக்
　　கற்பக மே! பள்ளி எழுந்தரு ளாயே 　　2

ஒருமருப் போடும் இருசெவி கொண்டாய்
உணர்த்திடும் முக்கண் நாலுவாய் பெற்றுய்
திருவளர் அஞ்செழுத் தோதிட வைத்தாய்
சிவனுருவாய்க் கங்கை ஆறு புனைந்தாய்
இருமையும் ஆக்கிடும் ஏழிசை யானுய்
எட்டவொணு இன்பம் எட்டிட வைத்தாய்
கருவடை யாதெமைக் காத்தருள் புரியும்
கற்பக மே!பள்ளி எழுந்தரு ளாயே. 3

கதியென நின்ருள் கருதிநிற் கின்ற
கணங்களி ஞல்பெயர் கணபதி ஆச்சோ?
துதிசெயும் அடியவர் திருமுறை பாடித்
துதிக்கை யிஞல்கரம் துதிக்கையென் ஞச்சோ?
விதியினை மாற்றி எழுதிய தாலே
விளங்கிய கொம்பும் வடிவினைத் ததுவோ?
கதிரென வந்நகக் காட்டினில் வளரும்
கற்பக மே! பள்ளி எழுந்தரு ளாயே. 4

காத்திடும் உந்தன் கருணையைக் கண்டே
கண்ணனும் ஆழியில் கண்துயில் கின்ருன்
சீர்த்தி மிகுந்த உன் சேவையி ஞலே
தில்லையில் ஈசன் திருநடம் செய்வான்
வேர்த்திடும் போதினில் காத்தலில் லாயோ?
மேதினி மேல்துணை வேறினி யுண்டோ?
காத்திருக் கின்றவர் கண்புனல் மாற்றக்
கற்பக மே!பள்ளி எழுந்தரு ளாயே. 5

சீரமர் கொன்றைத் திருவீச ரோடும்
சிவகாமி அன்னை காத்திருக் கின்றாள்
வாரமர் குழலாள் வடிவுடை யாளொடும்
வயிரவன் பட்டி வளரொளி நாதர்
பேரமர் திருமால் பிரமனும் முதலாய்ப்
பேசிடும் இமையோர் வந்திருக் கின்றார்.
காரமர் மேனிக் கணபதி என்னும்
கற்பக மே! பள்ளி எழுந்தரு ளாயே. 6

செந்தமிழ் பாடவும் கண்துயில் வாயோ?
திருமுறை கண்டவன் ஈதுண ராயோ?
வந்தவர் போற்றிட அருள்மரு தீசர்
மாங்கனி ஞானத்தை வைத்திருக் கின்றார்
முந்திய பிள்ளை நீ அறிதுயில் கொண்டாய்
முருகனோ குன்றக் குடிவரை வந்தான்
கந்தன் அருட்குமுன் வந்துதித் தாளக்
கற்பக மே! பள்ளி எழுந்தரு ளாயே. 7

மங்கல மாகிய மந்திரம் காட்ட
வந்த துதிக்கை வலஞ்சுழி பெற்றாய்
ஐங்கரந் தாங்கும் நிலையினை மாற்றி
அருள்செயய் பொலியும் இருகரம் பெற்றாய்
பங்கயம் போலொளிர் வலக்கரந் தன்னில்
பாதகம் மாற்றிடும் மோதகம் வைத்தாய்.
வெங்கன லாம்துயர் மாற்றிடும் தேசி
விநாயக னே! பள்ளி எழுந்தரு ளாயே. 8

காகமாய் வந்தொடு கமண்டல நீரால்
காவிரி தந்தவன் கருணைதா ராயோ?
போகம னைத்தையும் அடியருக் காக்கிப்
புண்ணியன் அறுகைப் புனைந்திருக் கின்றாய்
மோகம கற்றியுன் திருவடி ஞானம்
மூலா தாரத்தில் மூண்டெழச் செய்வாய்.
வேகம னைத்தையும் மாற்றிடும் தேசி
விநாயக னே! பள்ளி எழுந்தரு ளாயே. 9

போற்றியுன் சேவடி. போற்றியுன் நாமம்
போற்றியுன் கோயில் புரந்திடும் சான்றோர்
போற்றியுன் சதுர்த்தி விரதமே நிற்கும்
புண்ணியச் சான்றோர் பொன்னடி போற்றி.
வீற்றிருந் தருளும் பிள்ளையார் பட்டி
மிதித்திடும் அடியார் அடித்தலம் போற்றி
காற்றினி லேவரும் ஓமெனும் ஓசைக்
கற்பக மே! பள்ளி எழுந்தரு ளாயே. 10



## வாழ்த்து

1. வானுலகும் மண்ணுலகும் வாழ, மறை வாழப்,
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசைவி ளங்க,
ஞானமத, ஐந்துகர மூன்றுவிழி, நால் வாய்,
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பரம்.

*சேக்கிழார் புராணம்* — *உமாபதி சிவாச்சாரியார்*

2. வான்முகில் வழாது பெய்க, மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க, குறைவிலாது உயிர்கள் வாழ்க,
நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளக்குக உலகமெல்லாம்!

*கந்தபுராணம்,* — *கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்*

திருச்சிற்றம்பலம்

# I பன்னிரு திருமுறைகளின் விளக்கம்

| திருமுறை எண் | ஆசிரியர் | திருமுறையின் பெயர் | பாடல் தொகை |
|---|---|---|---|
| 1—3 | திருஞானசம்பந்த சுவாமிகள் | திருக்கடைக் காப்பு | 4158 |
| 4—6 | திருநாவுக்கரசு சுவாமிகள் | தேவாரம் | 3067 |
| 7 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்னும் ஆரூரர் | திருப்பாட்டு | 1026 |
| 8 | மாணிக்கவாசக சுவாமிகள் | திருவாசகம் | 658 |
| | | திருக்கோவையார் | 400 |
| 9 | திருமாளிகைத் தேவர் உள்ளிட்ட ஒன்பதின்மர் | திருவிசைப்பா | 288 |
| | சேந்தனர் | திருப்பல்லாண்டு | 13 |
| 10 | திருமூலதேவ நாயனர் | திருமந்திரம் | 3047 |
| 11 | திருவாலவாயுடையார் (ஸ்ரீ சோமசுந்தரப் பெருமான்) உள்ளிட்ட பன்னிருவர் | பதினேராந்திருமுறை | 1406 |
| 12 | சேக்கிழார் சுவாமிகள் | பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணம் | 4286 |
| மொத்தம் | ஆசிரியர்கள் 27 | பாடல்கள் | 18349 |

திருச்சிற்றம்பலம்

## II சைவ சித்தாந்த சாத்திர நூல்களின் விளக்கம்

| எண் | நூலின் பெயர் | ஆசிரியரின் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | திருவுந்தியார் | உய்யவந்ததேவநாயனர் | — |
| 2 | திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர் | — |
| 3 | சிவஞான போதம் (வார்த்திகப் பொழிப்புரையுடன்) | மெய்கண்ட தேவநாயனர் | சந்தான குரவரில் முதல்வர் |
| 4 | சிவஞான சித்தியார் | அருணந்தி சிவாச்சாரியார் | மேற்கண்டவரின் சீடர். சந்தான குரவரில் இரண்டாமவர் |
| 5 | இருபா இருபஃது | ஷை | |
| 6 | உண்மை விளக்கம் | திருவதிகை மனவாசகங்கடந்தார் | — |
| 7 | சிவப்பிரகாசம் | உமாபதி சிவாச்சாரியார் | சந்தான குரவரில் நான்காமவர் |
| 8 | திருவருட்பயன் | | |
| 9 | வினவெண்பா | | |
| 10 | போற்றிப்பஃறொடை | | |
| 11 | கொடிக்கவி | | |
| 12 | நெஞ்சுவிடுதூது | | |
| 13 | உண்மைநெறி விளக்கம் | | |
| 14 | சங்கற்பநிராகரணம் | | |

# III சமய குரவர்கள் நால்வரைப் பற்றிய குறிப்புகள்

| எண் | குறிப்புகளின் வகை | திருஞான சம்பந்த சுவாமிகள் | திருநாவுக்கரசு சுவாமிகள் | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | மாணிக்கவாசக சுவாமிகள் |
|---|---|---|---|---|---|
| 1 | அவதரித்த நாடு | சோழநாடு (தஞ்சை மாவட்டம்) | நடு கடலூர் | நாடு மாவட்டம் | பாண்டி நாடு மதுரை மாவட்டம் |
| 2 | அவதரித்த தலம் | சீர்காழி | திருவாமூர் | திருநாவலூர் | திருவாதவூர் |
| 3 | அவதரித்த குலம் | வைதீக அந்தணர் | வேளாளர் | ஆதிசைவர் | அமாத்திய அந்தணர் |
| 4 | வாழ்ந்த வயது | 16 | 81 | 18 | 32 |
| 5 | வாழ்ந்த காலம் | ஏழாம் | நூற்றாண்டு | ஒன்பதாம் நூற்றாண்டு | நான்காம் நூற்றாண்டு |
| 6 | அருளிய திருமுறைகள் | திருக்கடைக் காப்பு 1, 2-3 | தேவாரம் 4, 5-6 | திருப்பாட்டு 7 | திருவாசகம் திருக்கோவையார் 8 |
| 7 | விளக்க வந்த வழிபாட்டுமுறை | கிரியை | சரியை | யோகம் | ஞானம் |
| 8 | சிவமான நாள் | வைகாசி மூலம் | சித்திரைச் சதயம் | ஆடிச் சுவாதி | ஆனி மகம் |

## IV சந்தான குரவர்கள்

(i) அகச்சந்தானம் :— நால்வர் : சரித்திர காலத்திற்கு முற்பட்டவர்

1. திருநந்திதேவர் 2. சனற்குமார முனிவர் 3. சத்திய ஞானதரிசினிகள் 4. பரஞ்சோதிமுனிவர்

(ii) புறச்சந்தானம் : நால்வர் : பதிமூன்றும் நூற்றுண்டு

| | பெயர் | அவதரித்த நாடு | அவதரித்த தலம் | அவதரித்த குலம் | அருளிய சாத்திர நூல்கள் | சிவமான நாள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | மெய்கண்டதேவர் | நடுநாடு (கடலூர் மாவட்டம்) | பெண்ணுகடம் | சைவ வேளாளர் | சிவஞானபோதம் (வார்த்திகப் பொழிப் புரையுடன் | ஐப்பசி சுவாதி |
| 2. | அருணந்தி சிவாச்சாரியார் | ஷை | திருத்துறையூர் | ஆதிசைவர் | 1. சிவஞான சித்தியார் 2. இருபா இருபஃது | புரட்டாசி பூரம் |
| 3. | மறைஞான சம்பந்தர் | சோழநாடு (தஞ்சை மாவட்டம்) | மருதூர் | ஷை | | ஆவணி உத்திரம் |
| 4. | உமாபதி சிவாச்சாரியார் | சோழநாடு கடலூர் மாவட்டம் | திருத்தில்லை | தில்லைவாழ் அந்தணர் | 1. சாத்திர நூல்கள் 8 (விபரப்பட்டியல் ||ல் பார்க்க) 2. பிற நூல்கள் * 6 | சித்திரை அஸ்தம் |

*1. திருமுறை கண்ட புராணம், 2. திருத்தொண்டர் புராண சாரம் 3. திருப்பதிகக் கோவை 4. திருப்பதிக் கோவை 5. சேக்கிழார் புராணம் 6. சிவக்ஷேத்திர சிவநாமக் கலிவெண்பா

உ

திருச்சிற்றம்பலம்

---

# V திருத்தொண்டத் தொகை அடியார்கள் 72

1. காலம்

(அ) தனி அடியார்: 63

| | | |
|---|---|---|
| 1. | கி. பி. 600 (சம்பந்தர், அப்பர் இவர்களுக்கு முற்பட்டவர்) | 17 |
| 2. | 601—680 (சம்பந்தர், அப்பர் இருவரின் காலத்தவர்) | 11 |
| 3. | 681—840 (இருவர் காலத்திற்கும் இடைப்பட்டவர்) | 22 |
| 4. | 840க்குப் பின் (ஆரூரார் காலத்தவர்) | 13 |
| | | 63 |

(ஆ) தொகை அடியார்: முக்காலத்தவர் 9

| 2. | வழிபாட்டு முறை | தனி அடியார் | தொகை அடியார் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | சிவலிங்க பக்தி | 36 | 8 | 44 |
| 2. | சங்கம பக்தி | 19 | — | 19 |
| 3. | குருபக்தி | 8 | — | 8 |
| 4. | முற்பிறவியின் பயன் | — | 1 | 1 |
| | | 63 | 9 | 72 |

3. மரபு (அ) தனி அடியார்

| | | |
|---|---|---|
| 1. | வேளாளர் | 13 |
| 2. | மாமறையோர் (அந்தணர்) | 12 |
| 3. | சிவமறையோர் (ஆதிசைவர்) | 4 |
| 4. | முடி மன்னர் | 6 |
| 5. | குறுநில மன்னர் | 5 |
| 6. | வணிகர் | 5 |
| 7. | ஆயர் | 2 |
| 8. | மருத்துவர் (மாமாத்திரர்) | 1 |
| 9. | வேட்கோவர் (குயவர்) | 1 |
| 10. | சான்ரூர் | 1 |
| 11. | செக்கார் | 1 |
| 12. | சாலியர் | 1 |
| 13. | பாணர் | 1 |
| 14. | ஏகாலியர் | 1 |
| 15. | வேடர் | 1 |
| 16 | பரவர் | 1 |
| 17. | புலையர் | 1 |
| 18. | மரபு தெரியவராதவர் | 6 |
| | | 63 |

(ஆ) தொகையடியார்

| | | |
|---|---|---|
| 1. | தில்லைவாழ் அந்தணர் | 1 |
| 2. | சிவமறையோர் | 1 |
| 3. | பலவகை மரபினர் | 7 |
| | | 9 |

உ

திருச்சிற்றம்பலம்

## மூவர் பாடிய தலங்களில் மூத்த பிள்ளையார் திருநாமங்கள்

| திருநாமம் | | ஸ்தலம் |
|---|---|---|
| அழகிய விநாயகர் | — | திருவாவடுதுறை |
| ஆண்ட பிள்ளையார் | — | நறையூர்ச்சித்தீச்சுரம், திருவிடைமருதூர் |
| ஆதி விநாயகர் | — | திருவையாறு |
| உச்சிப்பிள்ளையார் | — | திரிசிராப்பள்ளி |
| கங்கைக் கணபதி | — | குடந்தைக் கீழ்க்கோட்டம் |
| கடுக்காய்ப் பிள்ளையார் | — | திருக்காருயில் |
| கருக்கடி விநாயகர் | — | திருக்கச்சூர் |
| கள்ளவாரணப் பிள்ளையார் | — | திருக்கடவூர் |
| **கற்பகப் பிள்ளையார்** | — | **கடிக்குளம்,** திருக்கருகாவூர், தில்லை |
| கூப்பிடு பிள்ளையார் | — | திருமுருகன்பூண்டி. |
| கைகாட்டி விநாயகர் | — | திருநாட்டியத்தான்குடி. |
| கோடி விநாயகர் | — | கொட்டையூர். |
| சிந்தாமணி கணபதி | — | திருமறைக்காடு. |
| சுந்தர கணபதி | — | கீழ்வேளூர், திருமழபாடி. |
| சூதவனப் பிள்ளையார் | — | திருவுசாத்தானம். |
| செவிசாய்த்த விநாயகர் | — | அன்பிலாலந்துறை. |
| சொர்ண விநாயகர் | — | திருநள்ளாறு. |
| தாலமூல விநாயகர் | — | திருக்கச்சூர். |
| துணையிருந்த பிள்ளையார் | — | திருப்பனையூர். |
| நாகாபரண விநாயகர் | — | நாகைக்காரோணம். |
| நிர்த்தன விநாயகர் | — | இன்னம்பர் |
| படிக்காசு விநாயகர் | — | திருவீழிமிழலை. |
| படித்துறை விநாயகர் | — | திருவிடைமருதூர். |

3. மரபு (அ) தனி அடியார்

| | | |
|---|---|---|
| 1. | வேளாளர் | 13 |
| 2. | மாமறையோர் (அந்தணர்) | 12 |
| 3. | சிவமறையோர் (ஆதிசைவர்) | 4 |
| 4. | முடி மன்னர் | 6 |
| 5. | குறுநில மன்னர் | 5 |
| 6. | வணிகர் | 5 |
| 7. | ஆயர் | 2 |
| 8. | மருத்துவர் (மாமாத்திரர்) | 1 |
| 9. | வேட்கோவர் (குயவர்) | 1 |
| 10. | சான்றார் | 1 |
| 11. | செக்கார் | 1 |
| 12. | சாலியர் | 1 |
| 13. | பாணர் | 1 |
| 14. | ஏகாலியர் | 1 |
| 15. | வேடர் | 1 |
| 16 | பரவர் | 1 |
| 17. | புலையர் | 1 |
| 18. | மரபு தெரியவராதவர் | 6 |
| | | 63 |

(ஆ) தொகையடியார்

| | | |
|---|---|---|
| 1. | தில்லைவாழ் அந்தணர் | 1 |
| 2. | சிவமறையோர் | 1 |
| 3. | பலவகை மரபினர் | 7 |
| | | 9 |

திருச்சிற்றம்பலம்

## மூவர் பாடிய தலங்களில் மூத்த பிள்ளையார் திருநாமங்கள்

| திருநாமம் | | ஸ்தலம் |
|---|---|---|
| அழகிய விநாயகர் | — | திருவாவடுதுறை |
| ஆண்ட பிள்ளையார் | — | நறையூர்ச்சித்தீச்சுரம், திருவிடைமருதூர் |
| ஆதி விநாயகர் | — | திருவையாறு |
| உச்சிப்பிள்ளையார் | — | திரிசிராப்பள்ளி |
| கங்கைக் கணபதி | — | குடந்தைக் கீழ்க்கோட்டம் |
| கடுக்காய்ப் பிள்ளையார் | — | திருக்காருயில் |
| கருக்கடி விநாயகர் | — | திருக்கச்சூர் |
| கள்ளவாரணப் பிள்ளையார் | — | திருக்கடவூர் |
| **கற்பகப் பிள்ளையார்** | — | **கடிக்குளம்,** திருக்கருகாவூர், தில்லை |
| கூப்பிடு பிள்ளையார் | — | திருமுருகன்பூண்டி. |
| கைகாட்டி விநாயகர் | — | திருநாட்டியத்தான்குடி. |
| கோடி விநாயகர் | — | கொட்டையூர். |
| சிந்தாமணி கணபதி | — | திருமறைக்காடு. |
| சுந்தர கணபதி | — | கீழ்வேளூர், திருமழபாடி. |
| சூதவனப் பிள்ளையார் | — | திருவுசாத்தானம். |
| செவிசாய்த்த விநாயகர் | — | அன்பிலாலந்துறை. |
| சொர்ண விநாயகர் | — | திருநள்ளாறு. |
| தாலமூல விநாயகர் | — | திருக்கச்சூர். |
| துணையிருந்த பிள்ளையார் | — | திருப்பனையூர். |
| நாகாபரண விநாயகர் | — | நாகைக்காரோணம். |
| நிர்த்தன விநாயகர் | — | இன்னம்பர் |
| படிக்காசு விநாயகர் | — | திருவீழிமிழலை. |
| படித்துறை விநாயகர் | — | திருவிடைமருதூர். |

| திருநாமம் | | ஸ்தலம் |
|---|---|---|
| பிரளயங்காத்தபிள்ளையார் | — | திருப்புறம்பயம் |
| பொய்யா விநாயகர் | — | திருமாகறல். |
| பொல்லாப் பிள்ளையார் | — | திருநாரையூர். |
| மாவடிப் பிள்ளையார் | — | நாகைக்காரோணம். |
| மாற்றுரைத்த பிள்ளையார் | — | திருவாரூர். |
| முக்குறுணிப் பிள்ளையார் | — | ஆலவாய், கோயில், மாயூரம். |
| வரசித்தி விநாயகர் | — | திருவல்லம். |
| வலம்புரி விநாயகர் | — | திருக்களர் |
| வாதாபி கணபதி | — | திருப்புகலூர். |
| வீரஹத்தி விநாயகர் | - | திருமறைக்காடு. |
| வெள்ளை விநாயகர் | - | திருவலஞ்சுழி. |
| வேதப் பிள்ளையார் | — | திருவேதிகுடி. |

